**Sri T. SAMPATH** : நகராட்சிகள் 50 சத விகிதம் தொகை கொடுக்க வேண்டுமென்று தெரிவித்தார்கள். சில நகராட்சிகளுக்கு பண வருவாய் குறைவின் காரணமாக இத்தொகை கொடுக்க முடியாத நிலையிருக்கிறது. ஆகவே சர்க்கார் இந்த 50 சத விகிதம் பணத்திற்கு அவர்களுக்கு கடன் உதவி செய்வார்களா ?

**The Hon. Sri P. KAKKAN** : அப்படி இந்தத் திட்டத்தில் இல்லை. மத்திய சர்க்கார் பாதி கொடுக்கிறார்கள். பாதி ஸ்தல ஸ்தாபனங்கள் கொடுக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். பணம் இல்லாவிட்டால் எப்பொழுது பணம் வருகிறதா அப்பொழுது இதற்கு முன் வந்தால் கவனிக்கலாம்.

*Dam across Koraiyar*

* 1182 *Q.*—Sri V. ARUNACHALA THEVAR: Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to construct a dam across Koraiyar, Kulathur taluk ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Yes, sir.

*Power supply to Guruvappanaickanur*

*1183 *Q.*—**Sri M. A. B. ARUMUGHASAMI** : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திண்டுக்கல் தாலூகா கோடல்வாவி கிராமத்தைச் சேர்ந்த, குருவப்பநாயக்கனூர் பொதுஜனங்கள் 12—3—1960-ம் தேதியில் கனம் மின்சார அமைச்சர் அவர்களிடம் அவ்வூர் பொது கிணற்றிலிருந்து நீர் இறைக்க மின்சார மோட்டாருக்கு லைசென்சு கொடுத்ததைப்பற்றி ஏதேனும் புகார் மனு கொடுத்தார்களா ?

(இ) அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

The Hon. Sri V. RAMAIAH : (*a*) Yes, Sir. A petition was received on 9th March 1960.

(*b*) The matter is being examined in consultation with the Madras State Electricity Board. Certain further particulars have been called for from the Board and they are awaited.

**Sri M. A. B. ARUMUGHASAMI** : இந்த மின்சார இணைப்பு சர்க்கார் விடுமுறை நாள் அன்று, போலீஸ் பந்தோபஸ்தோடு கொடுக்கப்பட்டது உண்மையா ? அவ்வளவு அவசரமாக போலீஸ் பந்தோபஸ்தோடு கொடுக்க வேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது ?

**The Hon. Sri V. RAMAIAH** : இந்தக் கேள்வியில் எழுப்பப் பட்டிருக்கக்கூடிய பிரச்னை ஒரு பொதுவான பிரச்னையல்ல. இரு சாராருக்குள்ள ஒரு தகராறு. ஆகவே இதை நல்லவிதமாக நுணுக்கமாகப் பார்த்த அதிகாரிகள் இதை கோர்ட்டுக்கு சென்று ஒரு முடிவு செய்து கொள்ளவேண்டுமென்று தீர்ப்பு சொல்லியிருக்கிறார்கள். இதைப் பரிசீலனை செய்த அதிகாரிகள் எந்தவிதமான ஒரு திட்டவட்டமான முடிவிற்கும் வரவில்லை. அவர்கள் பரிசீலனை செய்து கொடுத்திருக்கும் முடிவுகளைப் பார்க்கும்போது, இந்த மின்சார இணைப்பு கொடுத்தது நியாயம் என்ற நிலையைத்தான் ஒப்புக்கொள்ளக்கூடிய அந்த ரூபத்தில் தான் பரிசீலனை செய்திருக்கிறார்கள். ஒவ்வொருவரும் பரிசீலனை செய்து இறுதியாக ஒரு முடிவிற்கு வரவேண்டுமென்றால், கோர்ட்டுக்குப் போய்தான் முடிவு எடுக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். இதில் சம்பந்தப் பட்ட எ.ஈ. இதில் கிராம மின்சார விஸ்தரிப்பு என்று கிடையாது, தனிப்பட்டவருக்கு கொடுத்திருக்கும் கனெக்ஷன். ஆகவே, தொடர்ந்து உப கேள்விகள் போட்டு எடுக்கக்கூடிய முடிவு எந்த ரூபத்தில் அமைய வேண்டும் என்பது குறித்து அரசாங்கத்தை கட்டுப்படுத்த வேண்டாம்.